உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# ॥ शिवनामावल्यष्टकम् ॥

# ॥ ஶிவநாமாவல்யஷ்டகம் ॥

**ஸ்ரீ ஆதிசங்கரர் அருளியது**
தமிழ் உரை:
**சிவபக்தி பிரசாரமணி ஆங்கீரஸ சர்மா**

**हे चन्द्रचूड मदनान्तक शूलपाणे**
**स्थाणो गिरीश गिरिजेश महेश शम्भो ।**
**भूतेश भीतभयसूदन मामनाथं**
**संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ १ ॥**

**ஹே சந்த்³ரசூட³ மத³னாந்தக ஶூலபாணே**
**ஸ்தா²ணோ கி³ரீஶ கி³ரிஜேஶ மஹேஶ ஶம்போ⁴ ।**
**பூ⁴தேஶ பீ⁴தப⁴யஸூத³ன மாமநாத²ம்**
**ஸம்ஸார து³:க²க³ஹனாஜ்ஜக³தீ³ஶ ரக்ஷ ॥ 1 ॥**

1. சந்திரனைத் தலையில் தரித்தவரே, மன்மதனுக்கு முடிவைச் செய்தவரே, சூலாயுதத்தை ஏந்திய திருக்கரத்தை உடையவரே, அசைவற்றவரே, கயிலையங்கிரியில் வசிப்பவரே. மலைமகள் மணாளனே, மஹேசரே, சுகங்களுக்கெல்லாம் உறைவிடமே, பூதங்களுக்கெல்லாம் தலைவரே, பயத்தைப் போக்குபவரே, நாதனற்றவனான என்னை பிறப்பிறப்பென்னும் தாங்க முடியாத துக்கத்தினின்றும், ஹே ஜகதீச! காப்பாற்ற வேண்டும்.

**हे पार्वतीहृदय वल्लभ चन्द्रमौले**
**भूताधिप प्रमथनाथ गिरीशचाप ।**
**हे वामदेव भव रुद्र पिनाकपाणे**
**संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ २ ॥**

**ஹே பார்வதீஹ்ருத³ய வல்லப⁴ சந்த்³ரமௌலே**
**பூ⁴தாதி⁴ப ப்ரமத²நாத² கி³ரீஶசாப ।**
**ஹே வாமதே³வ ப⁴வ ருத்³ர பினாகபாணே**
**ஸம்ஸார து³:க²க³ஹனாஜ்ஜக³தீ³ஶ ரக்ஷ ॥ 2 ॥**

2\. பார்வதிதேவியின் உள்ளத்திற்குப் சந்திரனைத் தலையில்தரித்தவரே, பூதகணங்களுக்கும் பிரமத கணங்களுக்கும் தலைவரே, மஹாமேருவை வில்லாகக் கொண்டவரே, அழகுவாய்ந்த தேவனே, என்றும் எங்கும் ஸத் சொரூபியாய் விளங்குபவரே, துக்கத்தையும் அதன் காரணத்தையும் போக்குபவரே, பிநாகமென்னும் வில்லையேந்திய திருக்கரத்தையுடையவரே, அனைத்து உலகங்களுக்கும் தலைவரே, ஸம்ஸாரமென்னும் தாங்க இயலாத துக்கத்தினின்றும் என்னைக் காத்தருள்வீராக.

**हे नीलकण्ठ वृषभध्वज पञ्चवक्त्र**
**लोकेश शेषवलय प्रमथेश शर्व ।**
**हे धूर्जटे पशुपते गिरिजापते मां**
**संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ ३ ॥**

**ஹே நீலகண்ட² வ்ருஷப⁴த்⁴வஜ பஞ்சவக்த்ர**
**லோகேஶ ஶேஷவலய ப்ரமதே²ஶ ஶர்வ ।**
**ஹே தூ⁴ர்ஜடே பஶுபதே கி³ரிஜாபதே மாம்**
**ஸம்ஸார து³:க²க³ஹனாஜ்ஜக³தீ³ஶ ரக்ஷ ॥ 3 ॥**

3\. நீலகண்டரே, காளைமாட்டினைக் கொடியில் உடையவரே, ஐம்முகப் பெருமானே, உலகத்திற்குத் தலைவனே, ஆதிசேஷனைத் தோள்வளையாகத்தரித்தவரே, பிரமத கணங்களுக்குத்தலைவரே, பாவங்களைப் போக்குபவரே, பாரமான சடைமுடியை உடையவரே, பசுபதியே, கிரிஜா என்ற பார்வதியின் பதியே, ஸம்ஸாரமென்னும் பெரிய துக்கத்தினின்றும் ஹே ஜகதீச! என்னைக் காத்தருள்வீராக.

**हे विश्वनाथ शिव शङ्कर देवदेव**
**गङ्गाधर प्रमथनायक नन्दिकेश |**
**बाणेश्वरान्धकरिपो हर लोकनाथ**
**संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ ४ ॥**

**ஹே விஶ்வநாத² ஶிவ ஶங்கர தே³வதே³வ**
**க³ங்கா³த⁴ர ப்ரமத²நாயக நந்தி³கேஶ ।**
**பா³ணேஶ்வராந்த⁴கரிபோ ஹர லோகநாத²**
**ஸம்ஸார து³:க²க³ஹனாஜ்ஜக³தீ³ஶ ரக்ஷ ॥ 4 ॥**

4\. அகில உலகத்துக்கும் தலைவரே, மங்களமூர்த்தியே, சுகத்தைச் செய்பவரே, தேவர்களுக்கு எல்லாம் மேலான தேவனே, கங்காநதியைச் சிரத்தில் தரித்தவரே, பிரமத கணங்களின் தலைவனே, நந்திக்கு ஈசனே, பாணனுக்கு ஈச்வரரே, அந்தகன் என்ற அசுரனையழித்தவரே, ஸம்ஹார மூர்த்தியே, உலகநாதரே, ஸம்ஸாரமென்னும் அதி துக்கத்தினின்றும் என்னைக் காத்தருள்வீராக.

वाराणसीपुरपते मणिकर्णिकेश
वीरेश दक्षमखकाल विभो गणेश ।
सर्वज्ञ सर्वहृदयकनिवास नाथ
संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥ ५ ॥

வாராணஸீபுரபதே மணிர்காணகேஶ
வீரேஶ த³க்ஷமக²கால விபோ⁴ க³ணேஶ ।
ஸர்வஜ்ஞ ஸர்வஹ்ருத³யகநிவாஸ நாத²
ஸம்ஸாரது³:க²க³ஹனாஜ்ஜக³தீ³ஶ ரக்ஷ ॥ 5 ॥

5. வாராணஸிபுரம் என்னும் காசிமாநகரின் தலைவரே, மணிகர்ணிகா கட்டத்தில் எழுந்தருளியுள்ள ஈசனே, வீரர்கட்கு எல்லாம் ஈசனே, தக்ஷனின் யாகத்துக்கு முடிவைச் செய்தவரே, எங்கும் நிறைந்தவரே, சிவகணங்களின் தலைவரே, முற்றறிவுடையவரே, எல்லா உயிர்களின் ஹிருதயத்தில் வசிப்பவரே, ஹே ஜகதீச! ஸம்ஸாரமென்னும் தாங்கமுடியாத துக்கத்தினின்றும் என்னைக் காத்தருள வேணும்.

श्रीमन्महेश्वर कृपामय हे दयालो
हे व्योमकेश शितिकण्ठ गणाधिनाथ |
भस्माङ्गराग नृकपालकलापमाल
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ ६ ॥

ஶ்ரீமன்மஹேஶ்வர க்ருபாமய ஹே த³யாலோ
ஹே வ்யோமகேஶ ஶிதிகண்ட² க³ணாதி⁴நாத² ।
ப⁴ஸ்மாங்க³ராக³ ந்ருகபாலகலாபமால
ஸம்ஸார து³:க²க³ஹனாஜ்ஜக³தீ³ஶ ரக்ஷ ॥ 6 ॥

6. செல்வம் நிறைந்த மஹேச்வரனே, கருணையின் வடிவமே, தயாளுவே, ஆகாயத்தையே கேசமாக உடையவரே, விஷம் தங்கின இடம்தவிர மற்றபாகம் வெண்மையான கழுத்தையுடையவரே, கணங்களின் நாதரே, பஸ்மா என்னும் விபூதியை உடலில் அணிந்தவரே, மண்டையோடுகளை வரிசையாக மாலைபோல் அணிந்தவரே, என்னை ஸம்ஸாரமென்னும் பெரிய துக்கத்தினின்றும் ஹே! ஜகதீச, காத்தருளவேண்டும்.

कैलाशशैलविनिवास वृषाकपे हे
मृत्युञ्जय त्रिनयन त्रिजगन्निवास ।
नारायणप्रिय मदापह शक्तिनाथ
संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ ७ ॥

**கைலாஶஶைலவிநிவாஸ வ்ருஷாகபே ஹே**
**ம்ருத்யுஞ்ஜய த்ரிநயன த்ரிஜக³ந்நிவாஸ ।**
**நாராயணப்ரிய மதா³பஹ ஶக்திநாத²**
**ஸம்ஸார து³:க²க³ஹனாஜ்ஜக³தீ³ஶ ரக்ஷ ॥ 7 ॥**

7. திருக்கயிலாய மலையில் வசிப்பவரே, வ்ருஷபத்தின் மீது அமர்ந்தவரே, மரணதேவதையான இயமனை வென்றவரே, முக்கண்ணரே, மூவுலகத்திலும் வசிப்பவரே, நாராயணனிடம் பிரியம் உள்ளவரே, துஷ்டர்களின் கொழுப்பை அழிப்பவரே, பராசக்தியின் கணவரே, என்னை ஸம்ஸாரமாகிய பயங்கர துக்கத்தினின்றும், ஹே! ஜகதீச, காத்தருளவேண்டும்.

**विश्वेश विश्वभवनाशक विश्वरूप**
**विश्वात्मक त्रिभुवनैक गुणाधिकेश ।**
**हे विश्वनाथ करुणामय दीनबंधो**
**संसार दुःखगहनाज्जगदीश रक्ष ॥ ८ ॥**

**விஶ்வேஶ விஶ்வப⁴வநாஶக விஶ்வரூப**
**விஶ்வாத்மக த்ரிபு⁴வனைக கு³ணாதி⁴கேஶ ।**
**ஹே விஶ்வநாத² கருணாமய தீ³னப³ந்தோ⁴**
**ஸம்ஸார து³:க²க³ஹனாஜ்ஜக³தீ³ஶ ரக்ஷ ॥ 8 ॥**

8. உலகனைத்துக்கும் தலைவரே, இவ்வுலகில் பிறவிப் பிணியைப் போக்கும் தெய்வமே, அனைத்து உலகங்களையும் ஊடுருவிப் பேருருவங் கொண்டவரே, உலகத்தையே ஆத்மாவாகக் கொண்டவரே, மூவுலகிலும் மிக நல்ல குணமுடையவரே! ஹே விச்வநாத, கருணையே உருவானவரே, ஏழைகளின் பந்துவே, ஸம்ஸாரமென்னும் பயங்கர துன்பத்தினின்றும் ஹே! ஜகதீச, என்னைக் காத்தருள வேண்டும்.

**ஸ்ரீமத் ஆதிசங்கரர் அருளியதும், சிவநாமங்களால் தொடுக்கப்பட்ட மாலை போன்றதுமான சிவநாமாவல்யஷ்டகம் தமிழ் உரையுடன் முற்றிற்று.**

**சிவம்.**